Regd. No. 2975

ஸ்ரீ:

# ஸ்ரீ ராமாநுஜன் - 334

ஆசிரியர்: P. B. அண்ணங்கராசாரியர்.

# SRI RAMANUJAN

Editor:

*Mahamahimopadhyaya*

P. B. ANNANGARACHARYA, KANCHIPURAM-631503.

வருஷச் சந்தா ரூ. 10 ஜீவியச் சந்தா ரூ. 100

பேரருளாளன் பெருந்தேவித்தாயார்
திருவடிகளே சரணம்.



எம்பெருமானார் ஸ்ரீ [illegible]
திருவடிகளே சரணம்.



ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி - ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம்வாழி
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

1976 ஏப்ரல், பங்குனி மீ

— கடிதம் —

# பெங்களூர் மல்லேச்வரம் ஸத்ஸம்ப்ரதாயப்ரவசன ஸபையின் மார்கழி நிகழ்ச்சி



"ஸத்ஸம்ப்ரதாய ப்ரவசந ஸபை" என்ற நாமதேயத்துடன் வித்வான்களின் உபந்யாஸங்களை ஏற்பாடுசெய்யவும், பூர்வாசார்யர்களின் க்ரந்தங்களை அச்சிடவும், சிறுவர்களுக்கு நம் ஸம்ப்ரதாய நூல்களைப் பயிற்றுவிக்கவும் இத்யாதிகளான அநேக சீரியநோக்கங்களுடன் ஓர் ஸபை பெங்களூர் மாநகரில் ஆரப்பிக்கப் பெற்றது சமீபகாலத்தில். இதில் அநேக வித்வான்களின் உபந்யாஸங்கள் நிகழ்ந்து வருகின்றன. முதன்முதலில் நவராத்ரி மஹோத்ஸவ காலத்தில் ஸ்ரீ உ. வே. இளைய வில்லி பூவராஹாசாரியர் ஸ்வாமியின் ஸ்ரீ ராமாயண உபந்யாஸத்துடன் இச்சபை ஆரமபிக்கப்பட்டது.

மார்கழிமாதம் "கூடாரை வெல்லும் சீர்" என்ற பாசுர நன்னாளன்று பெங்களூரில் ஆங்காங்கு திருப்பாவை உபந்யாஸம் புரிந்துவந்த வித்வான்களைக்கொண்டு மல்லேச்வரம் ஸ்ரீ வேணுகோபாலஸ்வாமி ஸந்நிதியில் ஆயிரக்கணக்கான ரஸிக மஹாஜனங்களின முன்னிலையில் சிறுசிறு உபந்யாஸங்கள் நடைபெற்றன. அன்று ஞாயிற்றுக்கிழமை யாதலாலும (11—1—76) திருப்பாவை பாசுரத்தில் கூறியபடி 'கூடியிருந்து குளிர' விருப்பமுடையவர்கள் பெங்களூர் வாஸிகள் ஆதலாலும் மிகச் சிறந்த கோஷ்டி அமைந்தது இதற்குப் பல்லாண்டுபாட **ஸ்ரீ**மத் பரமஹம்ஸேத்யாதி **ஸ்ரீ** யதிராஜ ஜீயர்ஸ்வாமி திருநாராயணபுரம், வானமாமலை ராமாநுஜ ஜீயர் ஸ்வாமி, திருப்பதி சின்னகேள்வி ஜீயர்ஸாமி, ஸ்ரீரங்கம பௌண்டரீகபுரம் ஸ்வாமி முதலிய ஜீயர்ஸ்வாமிக்ளிடமிருந்தும் **ஸ்ரீ** உ. வே. மஹாவித்வான் ஜகதாசார்ய ஸிம்ஹாஸநாதீச பிரதிவாதி பயங்கரம் அண்ணங்காசார்ய ஸ்வாமி, கோயில் திருமலை அனந்தாண்பிள்ளை திருநாராயணபுரம் சதாபிஷேகம் ஸ்வாமி, டாக்டர் ராமய்யங்கார் ஸ்வாமி முதலிய பெரியோர்களிடமிருந்தும் ஸ்ரீமுகங்கள் கிடைக்கப்பெற்று சபையில் வாசிக்கப்பெற்று ச்ரோதாக்கள் ஆனந்த ஸாகரத்தில் அமிழ்ந்தனர். பிறகு கீழ்க்கண்ட வித்வான்களின் உபந்யாஸங்கள் நிகழ்ந்தன.

1. ஸ்ரீ உ. வே. ஸ்ரீரங்கம் நரஸிம்ஹாசாரியஸ்வாமி—'திருப்பாவை வைபவம்'
2. ஸ்ரீ உ. வே. லக்ஷ்மீதாதாசாரியர் ஸ்வாமி—'ஓங்கி உலகளந்த உத்தமன்'

(இதன் தொடர்ச்சி ராப்பர் 3ஆம் பக்கம் பார்க்க)

# ஸ்ரீ ராமாநுஜன்—334



ஆசிரியர்:
மஹாமஹிமோபாத்யாய ஸ்ரீகாஞ்சீ ப்ரதிவாதிபயங்கரம்
அண்ணங்கராசாரியர்

ஸம்புடம் 28 | ராக்ஷஸஹ பங்குனிமாதம் 10—4—76 | ஸஞ்சிகை 10


## ஸ்ரீ ஸ்வாமியின்
## பங்குனி விசாகத் திருநக்ஷத்ர நிகழ்ச்சி

ஏற்கெனவே வெளியிட்டிருந்தபடி நமது பக்ராதிபஸ்வாமியின் எண்பத்தைந்தாவது திருநக்ஷத்ரபூர்த்தி மஹோத்ஸவம் 10–3–76 புதன்கிழமை மாலை முதலாக 20–3–76 சனிக்கிழமை பிற்பகல் வரையில் விசேஷ வைபவமாக நடைபெற்று நிறைவேறியது. 1951 ஆவது வருஷத்தில் முதல்முதலாக நடைபெற்ற ஷஷ்ட்யப்த பூர்த்தி மஹோத்ஸவம் போலவே நிகழ்ந்தது என்று சொல்லலாம். எண்பத்தைந்து திருநக்ஷத்ரபூர்த்தி யாகையினுல் உபய வேதாதிகாரிகளான எண்பத்தைந்து ஸ்வாமிகளுக்குக் குறையாமல் எழுந்தருளப் பண்ணவேணுமென்கிற குதூஹலம் ஸ்ரீஸ்வாமி திருவுள்ளத்தில் இருந்தது. ஆனுல் மொத்தத்தில் இருநூறு ஸ்வாமிகளுக்கு மேல் ஸேவைஸாதித்தார்கள் என்பதை மிக்கமகிழ்ச்சியுடன் தெரிவிக்கிறேன். அத்யாபக ஸ்வாமிகளும் வேதபாராயண ஸ்வாமிகளுமாக நூறு திருநாமங்களுக்குக் குறையாமல் தினப்படி கோஷ்டியை அலங்கரித்து வந்தார்கள். இடையிடையே எழுந்தருளின ஸ்வாமிகள் நூறு திருநாமங்களுக்கு மேற் பட்டவர்கள்.

ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி திருமலை திருப்பதி பெரியஜீயர் ஸ்வாமியும், சின்ன ஜீயர் ஸ்வாமியும் இரண்டுநாள் கோஷ்டியை அலங்கரித்தருளினுர்கள். அனேக வித்வான்களின் உபன்யாஸங்கள் நடைபெற்ற விவரங்கள் சிறிது குறிப்பிடப்பெறுகின்றன. ஸ்ரீமதுபயவே [ஸ்ரீவில்லிபுத்தூர்] திருமலை விஞ்ஜிமூர் தாதாசாரியர் ஸ்வாமி பரிபூர்த்தியாக இங்கு எழுந்தருளி கோஷ்டியை நிர்வகித்தருளினது தவிர உபன்யாஸத்தை இரண்டாநாளே தொடங்கியருளினர். அடுத்தபடியாக திருவயிந்திரபுரத்திலிருந்து எழுந்தருளியிருந்த ஸ்ரீமதுபயவே அட்வகேட் T. S. ராமானுஜாசார்யஸ்வாமி உபன்யஸித்தார். ஸ்ரீமான் உ. வே. ஸ்ரீராஜமன்ஞர் ஸன்னிதி தர்ம

கர்த்தா சேனங்குளம் (பட்டுராஜம் என்கிற) K. R. ராஜகோபாலையங்கார் ஸ்வாமி நமது ஸ்வாமிக்கு மங்களாசாஸனமாக உபந்யஸித்தருளினார். ஸ்ரீமான் உ. வே. கொமாண்டூர் இளையவில்லி ஸுந்தரராஜாசார்யர், B A., B.T., கவிதைகளுமியற்றிப் பேசினார். ஸ்ரீ ஸ்வாமி கோஷ்டியை அலங்கரித்து எழுந்தருளியிருக்க அசக்தரா யிருந்தபடியால் உபந்யாஸகர்களுக்கு உத்ஸாஹமில்லாமலிருந்ததென்று பலர் பேசிக்கொண்டார்கள். ஸ்ரீ உ. வே. பிள்ளைலோகம், பாஷ்யகாராசாரியர், அவருடைய திருத்தம்பியார் தலசயனத்துறைவார், ஸ்ரீமான் சென்னை அட்வகேட் R V. சேஷாத்ரியாசாரியர், ஸ்ரீ குமாரவாடி ராமாநுஜாசாரியர், ஸ்ரீமான் உ. வே. ஸ்ரீரங்கம் R. கண்ணன் ஸ்வாமி (Tamil Pandit) ஆயுஷ்மாந் கிடாம்பிநாதமுனி முதலானோர் பேசினார்கள்.

இங்ஙனம்,

**தி. அ. அனந்தாழ்வான்.**

## மணவாளமாமுனிகள் டைரியைப்பற்றி

நிகழும் 1976ஆம்ஞு ஜனவரிமீ முதல்தேதியன்று மணவாளமாமுனிகள் டைரியென்று வெளியிட்டது பெரும்பாலும் உலகம் பரவியுள்ளது அது நிகழும் பங்குனி மாத முடிவுவரைக்குமே. சித்திரை முதல்தேதியிலிருந்து 1976ஞு முடிவாக அடுத்த டைரி வெளிவருமென்று பிரசுரித்திருந்தேன். ஆனால் அது வெளியிடப் பெறவில்லை. ஆயிரத்தெட்டு சுலோகங்கள் கொண்ட **ஸ்ரீசைலேச பாதுகாஸஹஸ்ரம்** என்கிற தோத்திரம் ஒவ்வொரு தேதியிலும் ஒவ்வொருசுலோகம் கருத்துரையுடன் அச்சிடப்பட்டுவந்தது. அது சுத்த ஸம்ஸ்க்ருதமாகையாலே அதைத் தமிழ் லிபியில் வாசிக்க சிரமப்படுவதாகப் பலரும் தெரிவித்தார்கள். உண்மையில் அது தேவநாகரிலிபியில் பதிப்பிக்கப்பட்டால்தான் பயன்படும். தற்காலம் அதற்குரிய ஸௌகரியம் வாய்க்காமையினாலே நிறுத்தப்பட்டிருக்கிற தென்பதை இதனால் தெரிவித்துக்கொண்டோம். (பத்ராதிபர்) ... ... ... *

## அடியேனுடல்நிலைபற்றி அடியேனே யெழுதுகின்றேன். P. B. A.

அடியேனது பங்குனிவிசாக ஜன்மநக்ஷத்ர கோஷ்டிக்காகப் பலவூர்களிலிருந்தும் பலபல ஆப்தர்கள் வந்திருந்தபடியால் அவரவர்கள் திரும்பிச்சென்ற பின்பு என்னுடல்நிலைபற்றிக் கலங்கிப் பேசியிருப்பர்கள் போலும். அதனால் ஆங்காங்குள்ள அன்பர்களும் நண்பர்களும் கலங்கியெழுதுங் கடிதங்களுக்கு அளவில்லாமலிருக்கின்றது. அவர்களுக்கெல்லாம் நான் தெரிவிக்கவேண்டும் பதிலை இதோ ஸ்ரீராமாநுஜன் மூலமாகவே தெரிவிக்க விரும்புகின்றேன்.

ஆப்தர்களுக்குக் கலக்கமுண்டானது ஸர்வாத்மநா நிஷ்காரணமன்று. சில காரணங்களுண்டு; (1) கண்கொள்ளாக்காட்சியாய் இருபது வேளைநடந்த கோஷ்டியில் ஏதோ சில வேளைகளில்மட்டுமே அடியேன் அந்வயிக்கப்பெற்றது. (2) இருபது வேளைகளிலும் தவறுமல் ஏதாவது விண்ணப்பஞ் செய்துகொண்டிருந்தவடியேன் ஒருவேளையிலும் ஒன்றும் வாய் திறவாமலிருந்தது. (3) டாக்டர் அடிக்கடி வருவதும் போவதுமாயிருந்தது. (4) பெரும்பாலும் தினப்படியாகவே நடந்துகொண்டிருந்த நம் தேவப்பெருமாளுடைய பஞ்சபர்வோத்ஸவங்களில் ஒருநாளும் அடியேன்

அநுபவிக்கப்பெருமல் விழுந்துகிடந்தது. இரண்டுவருடங்களுக்கு முன்பு அடியேனுக்கு நேத்ரசிகித்ஸை செய்த ஸ்ரீமான். N. ஸ்ரீநிவாஸய்யங்கார் அவர்கள் வந்துபோனது பலர்க்கும் அதிசங்கையை அதிசரிக்கச்செய்தது. இப்படிப்பட்ட சிலபல காரண விசேஷங்களினுல் அடியேன் மனமும் சிறிது நிலைதளும்பியேயிருந்தது.

## — இனி யெழுதுவதை ஊன்றிக் காணீர். —

நம்மாழ்வார் பெரும்பாலும் திருநாடு செல்லக் கதறுகின்றவரே; நான்கு பதிகங்கள் முடிவதற்குள்ளேயே *சாய்லொடு மணிமாமை தளர்ந்தேன்நான், இனியுனது வாயலகிலின்னடிசில் வைப்பாரைநாடாயே* என்று பேசும்படியாயிற்று, அவருடைய அனுஸந்தானங்களில் *கூவிக்கொள்ளுங் காலமின்னங் குறுகாதோ?* என்றுற்போன்ற அநுஸந்தானமே பெரும்பான்மையாயிருக்கும். அப்படிப்பட்ட ஆழ்வார் மலைநாட்டில் திருவாறன்விளையில் (7—10.) மண்டிய நுபவிக்கும்போது எம்பெருமான் அருகேவந்து "ஆழ்வீர்! திருநாட்டுக்கு எழுந்தருளலாமோ? இதோ அழைக்குப்போக வந்திருக்கிறேன். புறப்படுவீரா?" என்ன, அப்போது ஆழ்வார் அருளிச் செய்கிற பாசுரம் பரமவிலக்ஷணம்;— *சிந்தையினுல் சொல்லினுல் செய்கையால் நிலத்தேவர் குழு வணங்கும், சிந்தைமகிழ் திருவாறன் விளையுறை தீர்த்தனுக்கு அற்றபின்னே—**சிந்தை மற்றொன்றின் திறந்ததல்லாத் தன்மை தேவபிரானறியும்*** என்ருர். பரமபதத்தின் பேர் சொல்லுகையும் அஸஹ்யமாகி **மற்றொன்று** என்ருர்.

பரமபதநாதன் எப்படிப்பட்டவர்களையும் விடமாட்டாதே கொண்டுபோமவனுகையாலே என்றேனுமொருநாள் சென்றே யாகவேணும். அதுபற்றி விசாரமில்லை. ப்ராக்ருதம் மஹாகோஷ்டி நடந்த இருபது வேளைகளில் ஒருவேளைகூட அடியேன் ஒன்றும் விண்ணப்பம் செய்யப்பெற்றிலேன்—என்று கீழே வரைந்தேன். ஒருவேளைமட்டும் சிறிதுவிண்ணப்பம் செய்ய ப்ராப்தமாயிற்று பத்தெட்டு நிமிஷமே விண்ணப்பம் செய்தேனுயினும் அதனைச் சிறிது பெருக்கி யெழுதுகிறேனிங்கு.

*அருள்மாறன், சேரலர்கோன், துய்யபட்ட நாதன், சூடிக்கொடுத்த சுடர்க்கொடி, திருமங்கை மன்னன் ஆகிய இவர்கள் பதிகங்கள் பாடினவர்கள். பதிகந்தோறும் நிகமத்தில் பயனுரைக்குமிடத்து, *இப்பன்னுபாடல் வல்லார்க்கு இல்லை பாவமே—வைகுந்தத் தொன்றுவர்தாமே—வாயு நன்மக்களைப்பெற்று மகிழ்வரே—இறந்துபோய் வைகுந்தம் சேராவாறு எங்ஙனேயோ?—முகில்வண்ணவானத்திமையவர் சூழவிருப்பர் பேரின்பவெள்ளத்தே......என்றிங்ஙனே பலவகைப்பட்டிருந்தாலும் இத்தகைய பலச்ருதிகளெல்லாவற்றினுள்ளும் (திருவாய் மொழியில்) 8-5-11. *இங்கேகாண இப்பிறப்பேமகிழ்வர் எல்லியுங்காலையே* என்கிற பலச்ருதி உத்தமோத்தமமான தென்று அடியேன் அத்யவஸித்திருப்பது காலாந்தரே தேசாந்தரே தேஹாந்தரே விளையும் பலனைச்சொல்லிப் பயனென்? நாமும் நமருங்காண இந்நிலத்திலே இப்பிறப்பிலேயே இவ்வுடம்போடே ஆனந்தபரம்பரைகளை அநுபவிக்கப்பெறுவது ஸர்வாதிசாயியான ஸந்தோஷமல்லவா? நம்மாழ்வார் தம்மை மறந்து களிப்பின் எல்லையிலேநின்று இரண்டு பதிகங்கள் பேசுகிருர். [3-10. *சன்மம்பலபல—ஒன்று.] இதில் பாசுரந்தோறும் ஈற்றடி காண்மின்;

1. நானோர் குறைவிலனே.
2. யானொரு முட்டிலனே.
3. இறையாகிலும் யானென்மனத்துப் பரிவிலனே.
4. யானிறையேனுமிடரிலனே*
5. ஒன்றும் துயரிலனே.
6. யானோர் துன்பமிலனே.
7. ஏதுமல்லலிலனே.
8. யானோர் துக்கமிலனே.
9. ஒன்றும் தளர்விலனே.
10. யானென்றுங் கேடிலனே*

இனி மற்றொரு பதிகம் (6—4) *குரவையாச்சியரோடு* இதிலும் ஈற்றடிதோறும்

1. என்னகுறை நமக்கே.
2. எனக்கெவ்வுலகம் நிகரே.
3. எனக்கென்னினி நோவதுவே.
4. எனக்கென்னினி வேண்டுவதே
5. எனக்கென்ன விகலுளதே.
6. எனக்கென்ன மனப்பரிப்பே.
7. எனக்கினியார் நிகர்நீணிலத்தே.
8. எனக்கினியென்ன கலக்கமுண்டே.
9. மலக்குநாவுடையேற்கு மாறுளதோ இம்மண்ணின் மிசையே.
10. எனக்கார்பிறர் நாயகரே.

இங்ஙனே இரண்டு பதிகங்களிலும், அன்றியும் இடையிடையே மற்றுப்பல விடங்களிலும் ஆழ்வார்க்குச் சென்ற ஹர்ஷப்ரகர்ஷம் வாசாமகோசரம். ஆனால் இந்த ஹர்ஷம் நிலைநிற்கு மதன்று. ஆழ்வாருடைய ஹர்ஷ சோகங்கள் *முனியே நான்முகனளவும் மாறி மாறியே நிகழ்ந்தன. இதன் காரணமானது ஆசார்ய ஹ்ருதயத்தில்—"புண்ணியம் பாவம் புணர்ச்சிபிரிவை அவை சரித்தவர்க்கு ப்ரிய ஹிதபரன் தான் துளக்கற எங்கும் தழைக்கநடந்தும்" என்கிற சூர்ணையினால் அருளிச்செய்யப்பட்டது.

திருவாய்மொழி முதற்பத்தின் முடிவில் எம்பெருமானுடைய நிர்ஹேதுக கருணையின் திறத்தைப் பேசி ஆனந்த ஸாகரத்தில் மூழ்கியிருந்தார். உடனே (2—1ல்) *வாயுந்திருமால் மறைய நிற்க, ஆற்றாமைபோய்விஞ்சி மிக்க புலம்புதலாய்-ஆய அறியாதவற்றோ டணைந்தழுதமாறன்* என்னும்படி சாற்றுங்கழியுங் கட்டியழுதேங்கி நின்றார். *ஸம்யோகா விப்ரயோகாந்தா:* ஆகையாலே ஆழ்வாருடைய ஸம்ச்லேஷவிச்லேஷங்கள் மாறிமாறி நடந்து செல்லும். அதை அநுஸரித்திருக்கும் அவருடைய மனோ வ்ருத்திகள். ஆகவே ஆழ்வாருடைய ஹர்ஷ சோகங்களை நாம் எடுத்துரைக்கத்தகாது.

அடியேன் முக்கியமாக விஜ்ஞாபிக்க நினைத்ததை இனி விஜ்ஞாபிக்கிறேன். *இங்கே காண இப்பிறப்பே மகிழ்வர் எல்லியுங்காலையே* என்கிற திருவாய்மொழிப் பாசுரப்படியும், *இறையவனெங்கோனேருலகாரியன், தேன்மலர்ச் சேவடிசிந்தை செய்பவர், மாநிலத்தின்பமதெய்திவாழ்பவரே* என்கிற ஸ்ரீவசனபூஷணத் தனியன்படியும் அடியேன் அனுபவித்துவரும் ஆனந்தம் எனக்கே அஸாதாரணமென்று ஆவலிப்புடையேன். ப்ரமாணஸேவா—ப்ரமேயஸேவா—ப்ரமாத்ருஸேவா—என்னும் மூன்று ஸேவைகளினால் அநந்யஸாமாந்யமான ப்ரஹ்மானந்தம் அநுபவித்து வருகிறேன். இதில் யானே எனக்கு உவமன்.

**ப்ரமாண ஸேவாபாக்யம்;**—நமது எம்பெருமானார் தரிசனத்தில் காலக்ஷேபார்ஹமாக உபயவேதாந்த ரஹஸ்யகரந்த ரத்னங்கள் எவ்வளவுண்டோ அவ்வளவையும் அடியேன் அருமை நீங்கி எளிமை பெறப் பதிப்பித்திருப்பது உலகம் பரவியுள்ளது.

சென்றமாதத்து ஸ்ரீ ராமாநுஜனில் எண்பத்தைந்து வார்த்தாமாலையில் வெளிவந்திருக்கவேண்டும். ப்ளாக்ஸ் தாமதமாகக் கிடைத்தது.



ஸ்ரீமதுபயவே. பிள்ளைலோகம் தலசயனத் துறைவார்.



ஸ்ரீமதுபயவே. குமாரவாடி ராமாநுஜாசாரியார்.

**ஒரு சிறு வேண்டுகோள்.** இவ்விருவரும் ஆங்காங்குப் பிரசங்கம் செய்ய நேரும்போது அடுத்துவரும் பிங்கள வருஷத்தின் பெருமையைப் பிரசாரம் செய்து வரவேணுமென்பது. —(*P B. A*)

பதிப்பித்திருப்பது மட்டுமன்றே; பெரும்பாலும் நான்கு பாஷைகளிலும் ஆழ் பொருள் விளக்கங்களையும் பிரசுரித்திருக்கின்றேன். இதில் இரண்டு மஹான்களை நிச்சலும் நினைக்கின்றேன், கீர்த்திமூர்த்தியான (சென்னை அட்வகேட்) பயிலே. S கோபாலஸ்வாமி ஐயங்கார் ஸ்வாமி மறைந்து 42 வருடமானாலும் அவரை அறியாதாரில்லை. இவர் உபயவேதாந்தங்களிலும் மஹாநிபுணர். பிறர்க்கும் ப்ரவசனம் செய்த மஹா புருஷர்.

அடியேன் இளமையில் இந்த ஸ்வாமியின் பரமகிருபைக்கு இலக்காயிருந்ததனால் எம்பெருமான் இவரை அநுப்ரவேசித்து ஒரு நியமனம் தந்தருளினன்—(அதாவது)—நம்முடைய ஸம்பிரதாயத்தில் சிறிது பெரிது என்கிற வாசியில்லாமல் எத்தனை ஸ்தோத்ரங்கள் உண்டோ, பஞ்சஸ்தவ—ஸ்ரீரங்கராஜஸ்தவ—ஸ்ரீ குணரத்நகோச — ஸுதர்சநசதகாதிகள்—தேவராஜாஷ்டக அஷ்டச்லோகீப்ரப்ருதிகள்—

# சென்னை ஸத்காலக்ஷேப ஸபா ப்ரவர்த்தகர்கள்



Left to Right: —1 Sriman Pulipati Somasundara Rao, 2. Sriman Voora Jagannatha Chettiar, 3 Sriman U. Ve A. Srinivasayyangar, 4. Sriman C. Subrayalu Chetty Garu, 5 Sriman A. V Kannayya Naidu

இங்கே காட்சிதரும் மஹான்கள் ஐவரும் எம்மிடத்தில் பலவாண்டுகளாகவே மிக்க அன்புபூண்டவர்கள். சென்னைத் தொண்டைமண்டலம் ஹைஸ்கூல்ஹாலில் 1930ஆம் வருஷம் ஜூன்மீ முதலாக சனி, ஞாயிறுதோறும் மார்கழிமாதந்தோறும் இருபத்தேழு வருஷகாலம் இடையறாமல் நடந்துவந்த நமது ப்ரவசனம் சில காரணங்களினால் அவ்விடத்தில் நடத்த முடியாமல் இடம் மாற்ற நேர்ந்தபோது இந்த ஐவரும், மற்றும் ஸ்ரீமான் கரலபாடி ராதாகிருஷ்ணய்யா போல்வாரும் அபிமானித்து உப்பட்டூர் ஆழ்வார்செட்டி சாரிடி ஹாலில் நடத்திவருவது நன்றி பாராட்டத்தக்கது. ... ... ...

அவையெல்லாவற்றுக்கும் விரிவுக்கு அஞ்சாமல் தேவரீர் மணிப்ரவாள வியாக்கியானம் எழுதியே யாகவேணுமென்றும், அதை உடனுக்குடனே தாம் அச்சிட்டுத் தருவதாகவும் அநுக்ரஹித்தார். அப்போது ப்ரபல ஸ்திதியிலிருந்த ஸ்ரீவைஷ்ணவ க்ரந்த முத்ராபக ஸபைக்கு அந்த ஸ்வாமி தலைவராக எழுந்தருளியிருந்தபடியாலும் மிக்க செல்வாக்குடையராயிருந்தபடியாலும் அவருடைய நியமனம் பழுதுபடாமல்



Sriman P. V. Panduranga Chetty,
Manager, Vupputtoor Alwar Chetty's Charities
48-49 Govindappa Naicken Street,
Madras—600001.

இவர் வயதில் சிறுவராயிருந்தாலும் பெருந்தனமை யுடையவர். பெரியார்களிடம் அன்பும் ஆதரவும் மிக்கவர்.



ஸ்ரீமான் V. N. தேவநாதன்,
213, கோவிந்தப்ப நாய்க்கன் வீதி,
Madras—600001.

நம்முடைய கிரந்தமாலா பதிப்பு புத்தகங்கள் பெரும்பாலும் இவரிடத்திலும் கிடைக்கும்.

நிறைவேறி வந்தது. இரண்டொரு வருஷத்தில் பலபல ஸ்தோத்ரங்களுக்கு உரையியற்றினேன். அவர்க்குப் பிறகு பலபல பெரியார்கள் இதில் பங்குகொண்டு ஸ்தோத்ர நூல் ஒன்றுகூட சேஷியாதபடிக்கு—முகுந்தமாலை முதலாக நக்ஷத்ரமாலையீறாக ஸகலஸ்தோத்ரங்களுக்கும் விரிவுரைகள் மணிப்ரவாள பாஷையில் மட்டுமன்றிக்கே தெலுங்கு பாஷையிலுமாகிப் பலபதிப்புகளேறி உலகம் பரவியிருப்பதை அறியாதாரில்லை. இவ்விஷயத்தில் அந்த கோபாலஸ்வாமி ஐயங்காரை நாடோறும் நினைத்துவருகிறேன்.

இதற்கு முன்னமே திவ்ய ப்ரபந்த திவ்யார்த்த தீபிகையுரையும், முமுக்ஷுப்படி—தத்வத்ரய—ஸ்ரீவசனபூஷண—ஆசார்ய ஹ்ருதய ஸாரார்த்த தீபிகைகளும் தோன்றத் தொடங்கி அவையும் பலபதிப்புகளேறி உலகம்பரவிவிட்டன. ஸ்ரீவைஷ

ணவரத்னம் என்று விருது பெற்ற உயர்திரு. M. R. கோவிந்தசாமி நாயுடுவின் மஹோபகாரம் ஏழேழ்பிறவிக்கும் மறக்கத்தக்கதன்று. இப்பெரியாருடைய உடன் பிறந்தவர் ஸ்ரீமான். M. R சன்னைய நாயுடு என்பவர் உலகின் பாக்கியத்தினால் இற்றைக்கும் சென்னை மாநகரில் விளங்கிவருகிறார். இந்த ஸஹோதரர்களிருவரும் சென்னையில் தங்களுக்கிருந்த மாடமாளிகைகளில் இரண்டை விற்பனை செய்து கையில் Cash வைத்துக்கொண்டு 1927-ஆம் ஆண்டுமுதல் பன்னிரண்டாண்டு வரை இரவும் பகலும் விடாமுயற்சியாய்; என்னையும் அடிக்கடி உத்ஸாஹமூட்டிச் செய்த செயல் அதிமாநுஷம் அதிதைவம் என்றே சொல்லத்தகும்.

நன்னூலாசிரியர் (நன்னூலில்) — "தோன்று தோற்றித் துறைபல முடிப்பினும், தான்தற்புகழ்தல் தகுதியன்றே" — என்று முந்துறமுன்னம் சொல்லிவைத்து உடனே "மன்னுடைமன்றத்து ஓலைத்தூக்கினும், மன்னிய அவையிடை வெல்லுறு பொழுதினும், தன்னை மறுதலை பழித்தகாலையும், தன்னுடையாற்றலுணராரிடையினும், தன்னைப் புகழ்தலும் தகும் புலவோற்கே" என்று சொல்லிவைத்தார். அப்படிப்பட்ட பிரகரணங்கள் இப்போது இங்கு ஏதுமில்லை. கேவலம் ஸ்வாத்மஸந்தோஷ ஸந்தோஹ பரீவாஹமாகவே எழுதுகிறேன். ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாயத்தில் உபயவேதாந்த ரஹஸ்ய ப்ரஸ்தானங்களில் பூர்வாசார்ய ப்ரணீதங்களாக எத்தனை ஸ்ரீகோசங்களுண்டோ, அத்தனையும் ஒன்றுவிடாமல் — ஸ்ரீ பகவத்ராமாநுஜ க்ரந்தமாலா, ஸித்தித்ரயாதி க்ரந்தமாலா, பகவத்விஷய க்ரந்தமாலா, ஸ்ரீமத் வேதாந்த தேசிக க்ரந்தமாலா, ஸ்ரீமத் வரவரமுநீந்த்ர க்ரந்தமாலா, ஸங்கீர்ண நாநா க்ரந்தமாலா......இத்யாதிரூபேண வெளியிட்டும், இவற்றுக்கெல்லாம் ஒரு பாஷையிலன்றிக்கே பல பாஷைகளில் ஸாரார்த்த தீபிகைகள் எழுதி வெளியிட்டும் காலத்தைக் கழித்திருக்கிறேன், கழித்து வருகிறேன். செய்து முடித்தவை சிலவே; இன்னமும் செய்யவேண்டியவை-மனோரதத்திலுள்ளவை அபரிமிதம். ஆகவே, "ப்ராயோ ஹி அக்ருதக்ருத்யத்வாத்" என்கிற பூர்வார்த்தத்திற்கு இலக்காயிருக்கிறேனேயொழிய, "க்ருதக்ருத்யா: ப்ரதீக்ஷந்தே" என்கிற உத்தரார்த்தத்தின் அருகு செல்வதற்கும் அர்ஹதை யுடையேனல்லேன். பிங்கள வத்ஸர மங்கள மாலிகையைப்பற்றி இப்போது நிகழும் மநோரதாநாம் அதடா: ப்ரவாஹா: ஒருவாறு முடிவுபெற்றாகவேணும். இதற்காகவாவது பேரருளாளன் சிறிதுகாலம் அடியேனை இங்கு வைத்தாகவேண்டும். அடியேனுடைய ப்ரமாண ஸேவையைப் பற்றி இதுவரை எழுதினேன். இனி அடுத்தபடியாக ப்ரமேய ஸேவாபாக்கியத்தைப் பற்றி விஜ்ஞாபிக்கிறேன். ப்ரமாணங்களில் முக்கியமாக அநுபவிக்கப்படுகிற ப்ரமேயம்— எம்பெருமானவன். அப்பெருமான் கோயில் கொண்டெழுந்தருளியிருக்குமிடங்கள் நாற்றிசையிலும் நிரம்பியுள்ளன. ஆழ்வார் திருநகரி வானமாமலை திருக்குறுங்குடிவரையிலுள்ள தொண்டைநாடு நடுநாடு சோழநாடு பாண்டிநாட்டுத் திருப்பதிகளை எத்தனை பரியாயம் ஸேவித்திருப்பேனென்பது எனக்கே நினைவில்லை. 40, 50 பர்யாயங்களுக்கு மேலிருக்கும். மலைநாட்டுத் திருப்பதிகள் பதின்மூன்றையும் அன்பர்களுடனும் நண்பர்களுடனும் ஏழுபரியாயம் ஸேவிக்கும்பாக்கியம் பெற்றிருக்கிறேன். வடநாட்டில், ஹரித்வாரம் ஹ்ருஷீகேசம் லக்ஷ்மண ஜூலாபர்யந்தமாக (பஞ்சத்வாரகைகளும் பஞ்சவடியுமுட்பட) இருபத்துமூன்றுபர்யாமும், பதரிகாச்ர

மாந்தமாக மூன்று பரியாயமும் ஸேவிக்கும் பாக்கியம் பெற்றிருக்கிறேன். ஸாளக்ராமம் ஸேவிக்கப்பெறாத குறை அஸ்மதாசார்யபாதரான ஸ்ரீ ஜகத்குரு காதி ஸ்வாமிக்கும் அடியேனுக்கும் ஒக்கும்.........ப்ரமேய ஸேவை யென்பது இஃது ஒன்றேயன்று இனி ப்ரமாத்ரு ஸேவையைப்பற்றிச் சிறிது எழுதுகிறேன். ப்ரமாணங்களைப் பலமுகமாக அநுபவித்து வருபவர்கள் ப்ரமாதாக்கள். அன்னவர்களுக்கு அடியேன் ஸேவை செய்துவரும் பாக்கியத்தைக் கேளீர்;—

பூருவாசாரியர்களின திவ்யமங்கள விக்ரஹங்களை ஸேவிக்கப்பெற்றிலோமே என்கிற மனக்குறை அடியேனுக்கு மிகமிகவுண்டு; அக்காலங்களில் புகைப்படமெடுக்கும் ஸாதனங்கள் ஏற்படாமையே காரணமாயிருக்கவேணும், அத்தகைய அருமையில்லாத இக்காலத்தில் தோன்றியுள்ள மஹான்களை எந்தநாட்டிலுள்ளாரும் ஸேவிக்கப் பெறும்படி செய்யவேணுமென்கிற விருப்பம் அடியேனுக்கு அறியாக்கஸத்திலேயே உண்டாயிற்று. திருநாட்டுக் கெழுந்தருளின மஹான்களுடையவும் ஜீவித்திருக்கும் பெரியார்களுடையவும் திருவுருவப்படங்களை சேகரிக்கவும், அவற்றை ப்ளாக்கு செய்விக்கவும், அச்சிடுவிக்கவும் நாற்பதுவருஷகாலமாக அடியேன் முயற்சி செய்துவருவது எனக்குத் தனிப்பட்ட ஆனந்தப். இந்த வகையில் வைதிக லௌகிக மஹநீய மண்டலி யென்கிற தனிப்புத்தகமும் *தானேயெழுதிய தன்சரிதையென்னும் புத்தகமும் முதன்முதலாகத் தோன்றினவை. இப்பெரிய காரியம் பெரும்பான்மையாக மிச்சப்பட்டிருக்கின்றது.

ப்ரமாத்ருஸேவா என்றுமிந்தலகுப்பில்யாம் எழுத உத்தேசிப்பவை பலபல வுள்ளன. சென்னையில் பகவத்கதா ப்ரஸங்க ஸபா மூலமாகவும் ஸத்கால க்ஷேபஸபா மூலமாகவும் நாற்பத்தைந்து ஸம்வத்ஸரகாலமாக நடந்துவரும் பிரவசனங்களினால் ஆயிரக்கணக்கான ப்ரமாதாக்களுக்கு ஸேவை செய்து வந்திருக்கிறேன். 1930ஆம் வருடம் முதலாக இதுவரையில் மிக்கபரிசயங்கொண்டு மறைந்தவர்கள் ஓராயிர வர்க்கு மேற்பட்டவர்களே யொழியக் குறைந்தவர்களல்லர். ஒவ்வொரு ஸமய விசேஷங்களில் அவர்களெல்லார்க்கும் உருவப்படங்களேற் பட்டிருந்துப், ப்ளாக்குகளுங்கூட ஏற்பட்டிருந்தும் அவையெல்லாம் மூலைமுடுக்குகளில் தேடவேண்டியவையாயின. நிசழ்காலத்தில் பலவகைப்பட்ட யோக்யதைகள் பெற்ற பலருடைய உருவப்படங்களைப் பெரிய புத்தகமாக்கி வைக்கவேணுமென்கிற ஆசை பெரிதுமுள்ளது. *நானேறப் பெறுகின்றேன் நரகத்தை நகு நெஞ்சே *என்றிருக்குமென்னுடைய ஆசைகள் மற்றும் பலர்க்கு முண்டாக வேணுமென்று ஆசாஸிக்கின்றேன்.

இக்கட்டுரைக்கு என்ன மகுடமிட்டேன்; என்னென்ன எழுதிவந்தேன்; என்ன எழுதி முடிக்கிறேனென்பதை ஸஹ்ருதய ஸார்வபௌமர்கள் உய்த்துணர வேணும். எம்பெருமானிடத்தில் ஜீவிதபிக்ஷைபண்ணி நிற்கிறேனென்பது ஸாரம்.

# பரமபதநாதனுடைய பேறும்---பேரருளாளனுடைய இழவும்.

— சரமச்லோகம் —

அஸ்மிந் ராக்ஷஸவத்ஸரே திநகரே மீநம் கதே பாண்டரே
பக்ஷே ப்ராதமிகே திதௌ புததிநே ரேவத்யபிக்க்யோடுநி,
ஸ்ரீமத் கௌசிக வப்சவாரிதிவிது: வேதத்வயீபாரக:
ஸ்ரீஸிம்ஹார்யஸுதீ: குருபதம் த்யாயந் திவம் நிர்யயௌ.

ராக்ஷஸாப்தே மீநசுக்லப்ரதமாயாம் புதேZஹநி,
கௌசிகாந்வய ஸிம்ஹார்ய: ஸ்வாசார்ய சரணுவகாத்.

சென்ற பிங்கள ஸம்வத்ஸரம் தையில் மகத்தன்று திருநாட்டுக்கெழுந்தருளினவரும், ஸ்ரீகாஞ்சீ அழகிய மணவாள ராமாநுஜ ஜீயர் மடாஸ்தானத்தை அலங்கரித்தருளியிருந்தவரும், சதுஷ்ஷஷ்டிகலாவல்லப குலத்தில் திருவவதரித்திருந்தபடியாலே ஷஷ்டி ஜீயர் ஸ்வாமியென வழங்கப்பட்டு வந்தவருமான ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி ஜீயர் ஸ்வாமிக்குப் பூர்வாச்ரமத்தில் திருக்குமாரர் ஒருவரும், திருமகளார் மூவருமிருந்தனர். திருக்குமாரருடைய புத்ரபௌத்ர ஸந்ததிகள் உயர் பதவியில் விளங்கிவருகின்றன. ஜ்யேஷ்ட புத்ரியின் புதல்வனுய் அடியேன் இருந்துவருகிறேன். த்விதீய புத்ரி இவ்வூரிலேயே (மேட்டுப்பாளையத் தெருவில்) பிரதிவாதிபயங்கர வம்சத்தில் வாழ்க்கைப்பட்டிருந்து ஒரு புதல்வனைப்பெற்று மறைந்தாள். அண்ணு அனந்தாசாரி யென்கிற அவன் லௌகிகத்தில் மஹாமேதாவியாய் வாழ்ந்து உயர்பதவிகளில் ப்ரதிஷ்டிதனுயிருந்து பதினைந்து ஸம்வத்ஸரங்களுக்கு முன் மறைந்தான். அவனுடைய ஸ்வீக்ருத புத்திரன் விளங்கிவருகிறுன்.

— ப்ரக்ருதம் பேரருளாளனிழவு கேளீர் —

மூன்ருவது புத்திரியும் இவ்வூரிலேயே திருமலை விஞ்சிமூர்வம்சத்தில் வாழ்க்கைப்பட்டிருந்து எழுபத்துநான்கு வருடங்களுக்கு முன்பு அவள் ஒரு புதல்வனைப் பெற்று இரண்டொரு வருஷத்தில் ஆசாரியன் திருவடிசார்ந்தாள். அந்தப் புத்ரரத்னமே திருமலை விஞ்சிமூர் சிங்கராசாரியென்பவன். ஜீயர் பேரன் என்கிற நிருபகத்துடன் இவனைத் தென்னுட்டில் அறியாதாரில்லை. அடியேனுடைய வேதவேதாந்த வைஜயந்தீ பாடசாலையில் ஸாஹித்ய நாடகாலங்காரங்கள் வாசித்து உபயவேதத்தையும் ஸாங்கமாக அதிகரித்து அந்தப்பாடசாலையிலேயே உபாத்யாய பதவியையும் அத்யக்ஷ பதவியையும் இருபத்தைந்தாண்டுகள் வஹித்திருந்து, உபயவேத கண்டீரவம் என்று விருது பெற்று விளங்கி ஐம்பத்தைந்து வருஷகாலம் இடைவிடாமல் தேவப்பெருமாளுக்கு அருளிச்செயல் கைங்கரியம் நிர்வஹித்து நேற்று ஸம்வத்ஸராதியன்று காலை அநாயாஸமாகத் திருநாடு புகுந்தாயிற்று. புத்ர ஸந்தானமில்லாமையாலே தௌஹித்ரர்கள் மூலமாகச் சரம கைங்கரியம் நடைபெற்று வருகிறது.

இவரை யிழந்தது தேவப்பெருமாளுடைய அத்தாணிச் சேவகர்களில் பெரியதொரு ரத்னத்தை யிழந்த தொக்கு மென்னத் தட்டில்லை. இவருடைய ஸ்தானத்தைப் பூர்த்தி செய்யும் பாக்யசாலி துர்லபரேயாவர். பேரருளாளன் ஒருவரைக் கடாக்ஷிக்கவேணும்.

ஸ்ரீரஸ்து.

பேரருளாளன் பெருந்தேவித் தாயார் திருவடிகளே சரணம்

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்

# எம்பெருமானார் திருவவதார ஸம்வத்ஸரக் கொண்டாட்டம்

நமது ஸ்ரீராமானுஜன் 33ஆம் இதழில் அடியேன் வெளியிட்டுள்ள எண்பத்தைந்து வார்த்தாமாலையில் எண்பத்தைந்தாவது வார்த்தையை ஸாரஸங்க்ரஹமாக இங்கு நினைவூட்டுகிறேன். எம்பெருமானார் திருவவதரித்தது—ப்ரபவாதி ஷஷ்டி ஸம்வத்ஸர பர்யாயத்தில் பிங்களநாம ஸம்வத்ஸரத்தில் சித்திரையில் செய்ய திருவாதிரையிலாகும். ஸமீபித்திருக்கிற நள வருஷம் முடிந்தவுடனே பிங்கள ஸம்வத்ஸரம் தொடக்கமாகும். தொடக்கமான மறுநாளே 2-ம் தேதியன்றே எம்பெருமானார் மஹோத்ஸவத் தொடக்கமாகிறது. அதன்பிறகு நாற்பதாண்டுகள் கடந்தபிறகு ஸஹஸ்ராப்த பூர்த்தியாகும். ஆனால் அப்போது அவதார ஸம்வத்ஸரமாகிய பிங்களவாண்டு சேராது. அக்காலத்தில் வாழ்ச்சிபெறும் பாக்யசாலிகள் அந்த ஸஹஸ்ராப்த பூர்த்திக்கொண்டாட்டத்தில்அந்வயித்து ஆனந்திக்கக்கடவர்கள். தற்போது ஸமீபத்தில் நமக்கு ப்ராப்தமாகிற பிங்கள ஸம்வத்ஸரக் கொண்டாட்டத்தில் ஸ்ரீ வைஷ்ணவர்களனைவரும் பங்குகொள்ளவேணும்.



1. எம்பெருமானார் அருளிச் செய்த ஸ்ரீபாஷ்யாதி திவ்யக்ரந்தங்களின் அர்த்த விசேஷங்களைப் பல பாஷைகளிலும் பிரசுரித்தல்.

2. எம்பெருமானார் வைபவத்தை நாடுநகரமும் நன்கறியப் பல பாஷைகளிலும் பிரசுரித்தல்.

3. ஆங்காங்கு திவ்ய தேசங்கள் தோறும் ஸ்வாமியின் மாஸத்திருநக்ஷத்திரத்தைச் சிறப்பாகக் கொண்டாட வழிவகுத்தல். இன்னும் பெரியார்களுக்குத் தோன்றும் பத்ததிகளிலும்.

**பிங்கள வத்ஸர மங்களமாலிகை** யென்னும் பெயரால் மாதந்தோறும் அடியேன் ஸம்ஸ்க்ருத-த்ராவிட-ஆந்திர-ஹிந்தீபாஷைகளில் வெளியீடுகள் வெளியிட்டுவர உத்தேசித்திருக்கிறேன். அதற்கு ஆதர்சஸஞ்சிகையாக இதனை வெளியிடுகிறேனின்று பங்குனிவிசாகத்தில். அவரவர்கள் தாம் தாம் எழுதும் கட்டுரைகளை நமக்கு அனுப்பினல் வெளியிடுவிக்கிறோம். அவரவர் தாங்களே அச்சிட்டுக்கொண்டாலும் நன்றே.

ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

# பிங்களவத்ஸர மங்களமாலிகை—ஆதர்சப் பிரசுரம்

ஸ்ரீமதே ராமாநுஜாய நம: என்கிற இந்தவாக்கியத்திலுள்ள பத்து அக்ஷரங்களையும் முற்கொண்ட சுலோகங்களினாலும பாசுரங்களினாலும் எம்பெருமானார் வைபவத்தை யுரைக்கக் காணீர்.

1 ஸ்ரீ

ஸ்ரீமாதவாங்க்ரிஜலஜத்வய நித்யஸேவா
ப்ரேமாவிலாசயபராங்குசபாதபக்தம்,
காமாதிதோஷஹரமாத்மபதாச்ரிதாநாம்
ராமாநுஜம் யதிபதிம் ப்ரணமாமி மூர்த்நா.

(யதிராஜவிம்சதி—1.)

அழகு பொலிந்த எம்பெருமானது திருவடித் தாமரையிணைகளை நிச்சலும் தொழுகையிலுண்டான ப்ரேமத்தினால் கலங்கின திருவுள்ளமுடையரான நம்மாழ்வாருடைய திருவடிகளிலே அன்பு பூண்டவரும் தமது திருவடிகளைப் பணிந்தவர்களுக்கு காமம் முதலிய குற்றங்களைக் களைந்தொழிப்பவரும் யதிகளுக்குத் தலைவருமான எம்பெருமானாரை தலையால் வணங்குகின்றேன். நம்மாழ்வார் திருவடிகளில் அன்பு பூண்டவரும், தமது திருவடிகளைப் பணிந்தவர்களது குற்றங்களை நீக்கி நற்றங்களை வளர்ப்பவருமான எம்பெருமானாரைத் தொழுகின்றேனென்றவாறு. எம்பெருமானார்க்கு அதிசயாவஹமான வைபவங்கள் பல்லாயிரமிருந்தாலும் ஆழ்வார் திருவடிகளின் ப்ராவண்யத்தையே அவர் தமக்குப் பெரிய வைபவமாக அத்யவஸித்திருந்தாராதலால் அவருடைய அத்யவஸாயத்திற்குப் பொருந்த "பராங்குச பாதபக்தம்" என்றார். அமுதனாரும் "மாறனடி பணிந்துய்ந்தவன்" என்றே தொடங்கினர். "தமிழ் மறைகளாயிரமும் ஈன்ற முதல் தாய் சடகோபன், மொய்ம்பால் வளர்த்தவிதத்தாய் இராமாநுசன்" என்ற திருவாய்மொழித் தனியனாலும் "பாஷ்யகாரர் இது கொண்டு ஸூத்ர வாக்யங்களொருங்க விடுவர்" என்ற ஆசார்ய ஹ்ருதய சூர்ணையாலும் ஸ்வாமிக்கு ஆழ்வார் பக்கலிலிருந்த ப்ராவண்யாதிசயம் அறியற்பாலது. ஸ்வாமியின் ப்ராவண்யத்திற்குப் பாத்ரபூதரான நம்மாழ்வார் எப்படிப்பட்டவரென்னில், ஸ்ரீமாதவாங்க்ரிஜலஜத்வய நித்யஸேவா ப்ரேமாவிலாசயர், எம்பெருமானுடைய திருவடிகளிலே காதலடியாகக் கலங்கின திருவுள்ளமுடையவர் என்கை. 'தெளிந்த சிந்தையர்' என்று சொல்லிப் புகழ்வது ப்ராப்தமாயிருக்க, ஆவிலாசய என்று கலங்கின திருவுள்ளமுடையவர் என்று விசேஷணமிடுவது பெருமைக்கு ஒக்குமோவென்னில்; கர்மநிபந்தனமான கலக்கம் ஹேயமேயல்லது ப்ரேமநிபந்தனமான கலக்கம் ஹேயமன்று, மிகவும் உபாதேயம், உத்தேச்யம் என்கிற சாஸ்த்ரார்த்தம் இங்கு அறியத்தக்கது. ப்ரேமநிபந்தனமான கலக்கத்தினால் செய்யும் காரியம் ஏதெனில்; மடலெடுக்கவொருப்படுகை, மங்களாசாஸனத்திலேயூன்றுகை, நோன்பு நோற்கை முதலியனவாம். இவை ப்ரேமபரவசர்க்கு அவத்யமன்று "ஜ்ஞாந விபாககார்யமான அஜ்ஞாநத்தாலே வருமவையெல்லாம் அடிக்கழஞ்சு பெறும்" என்கிற ஸ்ரீவசநபூஷண திவ்ய ஸூக்தியும் அதன் வியாக்கியான ஸ்ரீஸூக்திகளும் இங்கே அநுஸந்தேயம். ஸித்தோபாயமான அவன் பண்ணின க்ருஷி பலமாய் விளைவது இக்கலக்கமென்று கொள்ள

லேனும். பாரங்குசரென்கிற திருநாமத்திற்கு இரண்டுவகையான வ்யுத்பத்தியுண்டு. பரர்களுக்கு அங்குசமாயிருப்பவரென்றும், பரனுக்கு அங்குசபாயிருப்பவரென்றும். (அதவாது-) பரர்களாகிறார்—எம்பெருமானுக்கு குணமில்லை விக்ரஹமில்லை யென்னும் புறச்சமயிகள்; அவர்களுக்குத் தம்முடைய திவ்ய ஸூக்திகளாலே அங்குசமாயிருப்பவர்— அவர்களது செருக்கு மொழிகளை யடக்குபவர் என்கை முதல் வ்யுத்பத்தியின் கருத்து. இனி பராத்பரனை எம்பெருமானுக்கு அங்குசம் போன்றவர் என்கிற இரண்டாவது வ்யுத்பத்தியின் கருத்தாவது—வலக்கை யாழியிடக்கைச்சங்கமிவையுடை மால்வண்ணனை, "மலக்கு நாவுடையேற்கு" [திருவாய்மொழி 6-4-9] என்று ஆழ்வார் அருளிச்செய்தபடி தம்வசப்படுத்தி நடத்திக்கொள்ள வல்லரென்கை. [காமாதிதோஷஹரம்] இங்கு ஆதிசப்தத்தாலே க்ரோதம் லோபம் மோஹம் மதம் மாத்ஸர்யம் அஜ்ஞாநம் அஸூயை இவை கொள்ளத்தக்கன. 'காமாதிஹரம்' என்னுமல் 'காமாதி தோஷஹரம்' என்கையாலே காமம் முதலானவை நியமேந தோஷமல்லவென்றும் குணகோடியிலே கைக்கொள்ளத்தக்க காமாதிகளுமுண்டென்றும்தெரிவிக்கப்பட்டதாம். பகவத்விஷயத்திலே யுண்டாகிற காமமோஹாதிகளும் பகவத்பாகவதவிரோதிகள் திறத்திலேயுண்டாகிற க்ரோதமாத்ஸர்யாதிகளும் குணமேயல்லது தோஷமன்றே. அவை விலக்கத்தக்கவை யல்லவே. தோஷமான காமாதிகளே விலக்கத்தக்கவையாதலால் தோஷஹரம் என்றது. வணங்குவது தலையாலே யென்பது தெரிந்திருக்கச் செய்தேயும் 'மூர்த்நா ப்ரணமாமி' என்னவேணுமோவென்னில்; தலை படைத்த ப்ரயோஜனம் பெறுவோமென்று காட்டினபடி *வாயினால் பாடி மனத்தினால் சிந்திக்க* என்றாப்போலே.

2 ம. மண்மிசை யோனிகள் தோறும் பிறந்து *எங்கள் மாதவனே
கண்ணுறநிற்கிலும் காணகில்லா* உலகோர்க ளெல்லாம்
அண்ண லிராமாநுசன் வந்துதோன்றிய வப்பொழுதே
நண்ணரு ஞானந் தலைக்கொண்டு* நாரணற்காயினரே.

(இராமாநுச நூற்றந்தாதி—41.)

நமக்கு நாதனான திருமால்தானே இப்பூமியிலுள்ள (மனுஷ்யாதி) யோனிகள் தோறும் அவதரித்தது. எல்லாருடைய கண்ணுக்கும் தன்னை இலக்காக்கிக் கொண்டுநின்ற விடத்திலும் (அவனை நம்முடைய நாதனென்று) காணமாட்டாதிருந்த இவ்வுலகத்தாரெல்லாரும் ஸர்வஸ்வாமியான எம்பெருமானார் இங்கே வந்தவதரித்தவுடனே பெறுதற்கரிதான ஞானம் அதிகரிக்கப்பெற்று ஸ்ரீமந்நாராயணனுக்கு சேஷப்பட்டனவரென்கை. எம்பெருமானுடைய அவதாரத்திற்காட்டிலும் எம்பெருமானாருடைய அவதாரமே சிறப்புற்றதென்கிறார். "அஜாயமாநோ பஹுதா விஜாயதே" என்றும் "உயிரளிப்பான் எந்நின்ற யோனியுமாய்ப் பிறந்தாயிமையோர் தலைவா" என்றும் சொல்லுகிறபடியே எம்பெருமான் பல பல யோனிகளிற் பலவகைப்பிறவி பிறந்து கண்காண வந்துநின்று உபதேசங்களாலே ஸ்வஸ்வரூபத்தைக்காட்டிக்கொடுத்த விடத்திலும் யாரும் அவனை லக்ஷியப் பண்ணவில்லை; "அவஜாநந்தி மாம் மூடா:" [என்னை எல்லாரும் அவமானப்படுத்துகிறார்கள்] என்று அவன்றானே சொல்லிக்கொண்டு வருத்தப்பட வேண்டிற்றாயிற்று. ஆகையாலே பகவானுடைய அவதாரம் ஸம்ஸாரிகளுடைய தெள்ளறிவுக்கு உறுப்பாகவில்லை. எம்பெருமானாருடைய அவதாரமோ வென்னில், பயன் பெற்றது.

இவர் தாம் திருவவதரித்தவுடனே எல்லா வுலகத்தாரும் ஆச்சரியமான ஞானத்தைப்பெற்று உஜ்ஜீவித்தார்கள்—என்றுராயிற்று

3 தே. தேரார்மறையின் திறமென்று* மாயவன் தீயவரைக்
கூராழிகொண்டு குறைப்பது* கொண்டலனையவண்மை
ஏரார்குணத்தெம் மிராமாநுச னவ்வெழில் மறையில்
சேராதவரைச் சிதைப்பது* அப்போதொரு சிந்தைசெய்தே.

(இதுவும் நூற்றந்தாதி—74.)

(இப்பாவிகள்) வேதஞ்சொல்லுகிற வழியை நிரூபித்தறிகிறதில்லை யென்று பாவிகளை எம்பெருமான் தண்டிப்பது கூர்மையான தனது திருவாழியாலே; மேகம் போன்ற ஔதார்ய குணமுடையவரும் (மற்றும் பல) நல்லகுணங்களுடையவருமான ஸ்வாமி எம்பெருமானார் அந்தச் சிறந்த வேதத்தில் அந்வயியாதவர்களை பங்கப்படுத்துவது (எப்படி யென்றால்) அப்போதப்போது ஒவ்வொரு யுக்தியைக் கொண்டாம். எம்பெருமான் தனது ஆஜ்ஞா ரூபமான வேதங்களின் சட்டளைப்படி நடவாத கொடியவர்களைத் தனது திருவாழியைக் கொண்டு த்வப் ஸம்பண்ணிவிடுவன்; எம்பெருமானாரோவென்னில் அவ்வளவு ஆயாஸம் எடுத்துக்கொள்வதில்லை; வேதங்களை அடியோடு ஒப்புக்கொள்ளாத பாஹ்யர்களையும், வேதங்களைப் பிரமாணமாக ஒப்புக்கொண்டு அவற்றில் அபார்த்தங்களைப் பண்ணுகிற குத்ருஷ்டிகளையும் வாதப்போரில் அப்போதப்போது திருவுள்ளத்தில் ஸ்புரிக்கின்ற நல்ல யுக்திகளைக்கொண்டு கண்டித்துவிடுவர். இதனால், துஷ்டர்களை நிரஸிக்கும் வகையில் எம்பெருமானாருடைய சாதுரியம் ஒப்பற்றதென்று சொல்லிற்றாயிற்று.

4 ஶ்ரீ. ராமாநுஜமுநிர் ஜீயாத் யோ ஹரேர் பக்தியந்த்ரத:,
கலிகோலாஹல க்ரீடா முதாக்ரஹமபாஹரத்.

(ஸ்ரீரங்கராஜஸ்தவம்—1-3)

யாவரொரு எம்பெருமானார் எம்பெருமானிடத்து உண்டானபக்தியாகிற யந்த்ரத்தினால் கலிபுருஷனுடைய கோலாஹல விளையாட்டாகிற பாழும் பிசாசை துரத்தினாரோ, அந்த எம்பெருமானார் பல்லாண்டு பல்லாண்டு. இதனால் ஜகதாசார்யரான எம்பெருமானாரை வாழ்த்துகிறார். "கலியுங்கெடுங் கண்டுகொண்மின்" என்று மயர்வற மதிநலமருளப்பெற்ற ஆழ்வார் ஸூசிப்பித்தபடியே இவ்வுலகில் திருவவதரித்துக் கலியின் கொடுமைகளைத் தொலைத்தருளின எம்பெருமானார் வாழ்க என்கை. "இராமாநுசன் மறை தேர்ந்துலகில் புரியும் நன் ஞானம் பொருந்தாதவரைப் பொருங்கலியே" என்கிறபடியே இராமாநுசன் திருவடி ஸம்பந்திகளைக் கலிபுருஷன் அனுகவும் மாட்டானென்பது அறியத்தக்கது. "இராமாநுசனித் தலத்துதித்து—ஆனது செம்மை யறநெறி. பொய்ம்மை யறுசமயம் போனது பொன்றி, இறந்ததுவெங்கலி" என்ற நூற்றந்தாதிப் பாசுரமுமிங்கே அநுஸந்திப்பது. கலியின் கோலாஹலம் நிரம்பிய விளையாட்டைப் பேயாடலாகப் பேசினதற்கேற்ப ராமாநுசனுடைய பகவத் பக்தியை ஒரு யந்த்ரமாக ரூபிக்கிறார். பிசாசு ஓட்டுதல் யந்த்ரஸாத்யமாகையாலே பகவத்பக்தியாகிற யந்திரத்தினால் கலிவிலாஸ மாகிற பிசாசை ஓட்டினாரென்கிறது. "கலௌ க்ருதயுகம் தஸ்ய கலிஸ் தஸ்ய க்ருதேயுகே—ஹ்ருதயே யஸ்ய கோவிந்தோ யஸ்ய சேதஸி நாச்யுத:" என்றது காண்க.

(எவனுடைய உள்ளத்தில் எம்பெருமான் ஸுப்ரதிஷ்டிதனாக வாழ்கிருனே அவனுக்குக் கலியுகமே க்ருதயுகம்; எவனுடைய நெஞ்சில் எம்பெருமானில்லையோ அவனுக்குக் கிருதயுகமும் கலியுகமாம் என்கை.) இரண்டாம் பாதத்தின் முடிவில், "யந்த்ரத:, யந்த்ரித;, யந்த்ரிதாத்" என்பன பாடபேதங்கள். ... *

5 மா. மாதவ! முகுந்த! மதுஸூதந! முராரே!
தாவகபதாப்ஜயுகலேஹமிஹ யாசே,
லக்ஷ்மண முநீந்த்ர சரணாப்ஜயுகலே மே
பக்திரபிவ்ருத்திமுபயாது நிரவத்யா. (ப்ர-அ.)

இஷ்டப்ராபண அநிஷ்ட நிவர்த்தந ஸமர்த்தனான லக்ஷ்மீநாதா! தேவரீருடைய திருவடித்தாமரையிணைகளிலே அடியேன் பிரார்த்திப்பதாவது—எம்பெருமானாருடைய திருவடித்தாமரையிணைகளில் எனக்கு நிஷ்கல்மஷமான பக்தி மேன்மேலும் வளரவேணுமென்பதே. ... ... ... *

6 நு. நுதிரஸ்து ஸததஞ்ச மம வாசி யதிராட்
குணராசிமதிக்ருத்ய குணராசிஸரிதா,
நதிரஸ்து மம தஸ்ய பதபத்மயுகளே
மதிரஸ்து யதிராஜகதிதாஸு க்ருதிஷு. (ப்ர—அ.)

எனது வாக்கில் எப்போதும் எம்பெருமானாரது திருக்கல்யாணகுணவிஷயமாய்ச் சிறந்த ஸ்துதிகள் நிகழவேணும். அவருடைய திருவடித்தாமரையிணைகளிலேயே தலைவணங்கி யிருப்பேனாக. அவரருளிச்செய்த ஸ்ரீஸூக்திகளிலேயே எனது புத்தி செல்லவேணும். ... ... ... *

7 ஜா. ஜாயா ஜநநீ ஜநகஸ் தநயஸ்
தநயேதி விமோஹவசாத்ஸி ஸதா,
ப்ரலபந் ஸுவஸிந்துநிமக்நமநா;
அஹமத்ய யதீந்த்ரகடாக்ஷணஸாக். (ப்ர-அ.)

*ஆசைவாய்ச் சென்ற சிந்தையராகிப்படியே பாந்தவாபாஸலோலனாய்க் கிடந்த அடியேன் இன்று எம்பெருமானாருடைய திருக்கண்ணோக்கத்திற்கு இலக்காகப்பெற்றேன். இது ஒரு பரமபாக்யமடியேனுக்கு. ... ... *

8 ய. யதிப்ரவரபாரதீரஸபரேண நீதம் வய:
ப்ரபுல்லபலிதம் சிர: பரமிஹ க்ஷமம் ப்ரார்த்தயே;
நிரஸ்தரிபுஸம்பவே க்வசந ரங்க முக்யே விபோ!
பரஸ்பரஹிதைஷிணாம் பரிஸரேஷு மாம் வர்த்தய. (அபீதிஸ்தவே)

திருவரங்கம் பெரியகோயிலில் நித்யவாஸம் செய்தருளத் திருவுள்ளம்பற்றிய ஸ்ரீவேதாந்த தேசிகன், திருப்பேர் நகர் ப்ராந்தம் எழுந்தருளினவாறே கோயிலில் துருஷ்கயவநாதிகளால் நேர்ந்த உபப்லவத்தைக் கேட்டு அங்கு எழுந்தருளாதே ஸத்யமங்கலத்தில் சிலகாலம் எழுந்தருளி யிருந்தபோது அருளிச்செய்த அபீதிஸ்

